# ஸ்ரீரமண சற்குரு மாலை





K.V.
இயற்றியோர்
T. R. ராமச்சந்திர அய்யர்,
வேங்கடரமணன்.




ஓம்

# முகில்விடு தூது

பாலேறு வார்கடலின் பாலெழுந்த நஞ்சமென
நீலேறு கின்ற நெடுமுகிலே-சூலேறு
வான் புயலே வையத்துள் வாழுமுயிரத்தனைக்குந்
தான்புசிக்க வூட்டுஞ் சலதரமே-தேன்பிலிற்றுந்
தண்டலை மாடஞ் சிகிரிசாற்வெற்பின் மேற்றுயிலுங்
கண்டார்களுக்கினிய காட்சியே-தண்டுழாய்
மாயவனூர்தியொடு மாருதனும் பின்னிற்க
வேயமுன்னோடு மெழிலியே-தூய
வுலகெங்கு மன்னியுறுஞ் சீர்த்தி நாட்டித்
திலக மெனவிளங்குஞ்செல்லே-பலகலையுங்
கற்றோர்கள் வெம்பிறவிக்கட்டறுத்த சான்றோர்கள்
நற்றவர்களேற்று நறும்பாதன்-முற்றுமே
ஊணிழந்தார் உள்ளமுணர் விழந்தா ரூணிழந்தார்
சேணிறைந்தார் தேடுந்திருப்பாதன்-மாணிறைந்த
பேரானிறவான்பிறவான் பெரியோரா
லோரானுறுதி யுருவாளன்-நீரார்
திமிதக்கடலில் சிவஞான நல்கு
மமிழ்தம் பருகுமமலன்-இமையவருக்
கெட்டாத வாழ்விலிருந்துயிரை யின்றொடுக்கித்
தட்டாதவின் பந்தரு மண்ணல்-மட்டாருங்
கார்க்குழலியர் காமக்கட்டறுக்கு மாதேவன்
ஆர்க்கு மருவிய ருண்மலையன்-பார்க்குள்ளே

வந்து வந்து மாப்பிறவி தந்து தந்துமாயையினு
ழனுந்து ழனுந்து வாடுகின்ற நோயாளர்-முந்திமுந்தி
யென்னப்ப வென்னைய வென்னரசே காவெனவே
பன்னிப்பணிந்தேற்றும் பண்பினன்-வன்னச்
சுரும்புங்குயிலுஞ் சுதி கூட்டிவேத
மருங்கிற்பயிலும் வளத்தான்-பெருவரையிற்
றன்னொளியு மந்தணன்மால் தாங்காணாப் பேரொளியும்
மன்னொளியாகக் காட்டும்மணியொளியான்-மன்னவன்
சீயமத்திசார்த் தூலந் தேனுவரிப்புலியுந்
தாயவரா நகுலந் தாழலவன்-நேயமுற்றுக்
கட்டியணைக்கும் களிகாட்டும்பேரன்பால்
தட்டியெழிப்புந் தலையாட்டும்-வட்டமிட்டுச்
செங்கலுழ னுடுந் திகழன்ன நர்த்தமிடும்
பொங்கி மயிலாடும் புடைபாவும்-இங்குறுக
வென்றே தளிர்களெழிற் கரங்களாலழைக்கு
நன்றா மலர்கள் நனிபாவும்-குன்றாத
வேள்விப்புகைப்படல மேலுலகிற்பந்தரிடு
மூள்வினைகள் மாளுமவன் முன்னிலையில்-நீளு
மகக்காரகற்று மலரிமேலாய
சகக்காரணன்தேவன் செப்பு-முகக்காலந்
தானழிந்துந் தானழியாத்தன்மையின னித்தமுத்தன்
ஈனமழித்தாளு மிரமணவேள்-மோனநிலை
கொண்டான் குறிப்பே குறியான் பிறபொருளைக்
கண்டேன் மகிழ்ந்தேன்களிகூர்ந்தேன்-தண்டுளவத்
தாமன் றருமதன சாமிசம்பராரிசர
மாமலர்களென்மேல் மலர்ந்தனவே-தாமரையு
முல்லையசோகம் முழுநீலம் சூதமிவை
நல்லமலரென்றே நானினைந்தேன்-சொல்லுவேன்
பூவாளி யல்லவல்ல பூவுலகைச் சுட்டெரிக்குந்
தீவாளிமாரன்செயும்வாளி-ஏவாது

மேதிநமன்மேதினியோர் மெல்லுயிரைக்கொள்ளை கொள
வோதிவைத்த வித்தையெனவுன்னினேன்-நீதியறுந்
திங்கட்கடுந்தழலுந் தென்காற்றுச்சீறலுமெ
னங்கத்துட்டாக்கவலமந்தேன்-இங்கிவற்ருல்
வெந்தேனயர்ந்தேன் வியர்த்தேன் விழிவிழித்தேன்
நொந்தேன் விழுந்தேன் நுவலில்லேன்-கந்தாரப்பாற்
சென்றேன் பணிந்தேன்றிருவாளா தேவவென்றேன்
மன்றற்செய்தென்னை மகிழென்றேன்-ஒன்றுமே
பேசாத மோனப் பெருநிலையைக்கொண்டுளதா
லீசா வெம்மானே யிறையோனே-தேசாரு
மையனே நின்றனடைக்கலமாட்கொள்ளென்று
மெய்விரதம் பூண்டேன் மெலிவுற்றேன்-வையத்தி
லாடகத்திஞைசை யருஞ் சுற்றவாசை பிற
நீடகத்திற்பற்றறவே நீக்கினேன்-தேடரிதாந்
தித்திக்குந் தெள்ளமுதைச்சீயென்ருெதுக்கினேன்
கொத்துமலர் சூடிக்கொண்டதிலை-மத்தளஞ்சேர்
கீதநுகர்ந்தறியேன் கிள்ளைமொழி கேட்டறியேன்
வேதவொலிகேட்டு வியந்தறியேன்-ஏதமற
நெற்றிக்குப்பொட்டறியேன் நீள்விழுக்குமையறியேன்
சொற்றுவதென்வாழ்வனைத்துந் துக்கமே-சுற்றத்தார்
மங்கையருக்கீதழகோ மாநீலி கள்ளியெனச்
சங்கைமொழி கூறத்தனுவெடுத்தேன்-பங்கத்தா
லுற்ருருறவற்றே ஞரற்றேன் பேரற்றேன்
பெற்ருரைவிட்டுப் பிரிவுற்றேன்-மற்ருரு
மில்லையவரைவிட்டிங் கெனக்காருற்றதுணை
சொல்லுமவன்பாலென்ருெடர்வினையை-அல்லல்
சலதிகுளிப்பாள் தனியுயிரின்னேர
மிலதோ வுளதோ வெனவாம்-பலவியம்பி
நானுமவரும்பிரியா நட்புறவு மென்னினவர்
நானுமவருள்ளுறைய நாட்டுவாய்-வானுறைவோய்

கைம்மாறுவேண்டாது காசினிக்குக் கார்பொழியு
மைம்மேகயானென்வழங்குவது-மெய்ம்மாறு
கொண்டவர்கள் காணாத கோமான் குருபரர்க்குக்
கண்டவகையெல்லாங் கழறு.

ஓம்

## காலைப்பாட்டு

அருண னுதித்தன னருணகி ரிதன்னி
லழகிய ரமணரே வாரும் அருணாச-லேசரேவாரும். 1

சாலைக்குயிலோசை காலையிற் கூவிற்று
சற்குரு ரமணரேவாரும், சாம்பவி பாகரேவாரும். 2

சங்கமொ லித்தது தாரகை மங்கின
விங்கித ரமணரே வாரும், ஈசசு ரேசரேவாரும். 3

கோழிகள் கூவின குருகுக ளியம்பின
நாழிகை யாச்சுதுவாரும், நள்ளிருளகன்றதுவாரும். 4

சின்னங்கள் காகளம் பேரிகை யார்த்தன
பொன்னங்க ரமணரேவாரும், போதசொரூபரேவாரும். 5

காகங்க ரைந்தது காலையுமாயிற்று
நாகா பரணரே வாரும், நஞ்சணி கண்டரேவாரும். 6

கற்பனை யொழிந்தது கமலங்க ளலர்ந்தன
விற்பன ரமணரேவாரும், வேதாந்தரூபரேவாரும். 7

91/1



முக்குண ரகிதரே முத்திநா டாள்வோரே
சற்குண ரமணரே வாரும், சாந்தசொரூபரேவாரும். 8

சத்துச் சித்தானந்த வடிவினைச் சார்ந்திடும்
தத்துவ ராயரேவாரும், தாண்டவ மூர்த்தியேவாரும். 9

இன்பதுன் பமில்லா வேகாந்த மேடையி
லன்புருக் கொண்டோரேவாரும், ஆனந்தமோனரே வாரும்.

---

## ரமண மணிமாலை

ரமண சற்குரு ரமண சற்குரு
ரமண சற்குரு ராயனே
ரமண சற்குரு ரமண சற்குரு
ரமண சற்குரு ராயனே.

புகழும் பொன்னுல கத்து வானவர்
போற்றி நின்றுபு கழ்ந்திடுந்
திகழு நன்னில மாந்துதி ருச்சுழி
தன்னில் வந்தத யாபரன். (ரமண) 1

அழகு சுந்தர னன்பி னில்வரு
மமுத வாரிதி யருணையான்
மழவி டைப்பொரு ளருள்ப டைத்திடு
வடிவி லாவடி வானவன். (ரமண) 2

அமல ஞானவ ருட்பெ ருங்கட
லருணை யங்கிரி தன்னிலே
விமலமேயுரு வாகி வந்தொரு
விருப-நற்குகை மேவினன். (ரமண) 3

வாது செய்திடு மாயை தன்னைவ
ளைத்து நின்றுமி தித்தவன்
சூதுசெய்புல னோடு வஞ்சகச்
சூழ்வி னைத்தொகை யற்றவன் (ரமண) 4

அருணை யீசனெ டுத்த ணைந்திடு
மன்ப னென்குரு நாயகன்
கருணை யேவடி வாக நின்றிடு
கற்ப கத்தரு வாகினோன். (ரமண) 5

மூன்று தேகம றந்து முப்பத
வாழ்வி னிற்குடி யேறினன்
ரோன்றுமிச்சக வாழ்வி னிற்களி
யாது நின்றிடு தோன்றலான். (ரமண) 6

பிண்ட மேவிய நாத னேபிர
மாண்ட மேவிய நாதனைக்
கண்டு நின்றுக னிந்து ளேகமே
காக்ஷி யாய்க்களி கொண்டவன். (ரமண) 7

பொன்னிறந்தவழ் மேனி யன்புக
ழோங்கு செஞ்சடை வேணியன்
றன்ன ருங்குரு வாக வாய்த்திடு
தத்து வப்பொரு ளானவன். (ரமண) 8

பஞ்ச பூதநி றைந்து நின்றவன்
பஞ்ச கோசம தற்றவ
னஞ்ச வித்திடு மன்பர் துன்பமொ
ழிக்கு ஞானவி தாயகன். (ரமண) 9

முக்கு ணத்தடை யற்ற வன்முத
லாய தேவனி ராமயன்
பக்குவத்தவர் வந்து நின்று ~~து~~ ப
ணிந் ~~தித்தி~~ டும்பத ~~வைபவன்,~~ சோதியான் (ரமண) 10

ஆதி காரண காரியங் களை
 றிந்த சின்மய பூரணன்
வாதியா மல மாயை தன்னைவ
 தைத்து வீசிடு மாரணன். (ரமண) 11

தேவர் யாவரும் வந்து நின்றுது
 தித்தி டும்பத வைபவன்
காவ லாகிமெய் ஞான நாட்டர
 சாக நின்றிடு காரணன். (ரமண) 12

வேத நாயகன் வேத பூஷணன்
 வேதமே யுரு வாயவன்
காத லாய்ப்பர வாழ்வி னிற்கடி
 தேறி நின்றுக ளித்தவன். (ரமண) 13

துரிய மேவடி வாகித் தூவெளி
 யாட ரங்கம தாகினேன்
கரிய தாய்ச்சகமேமொடண்டங்க
 லந்து நின்றக லப்பிலான். (ரமண) 14

சின்ம யத்தரு விற்ப ழுத்திடு
 தீங்க னிச்சுவை யாகினேன்
றன்ம யப்பொரு ளாய்த்த னித்திடு
 சச்சி தானந்த மாகினேன் (ரமண) 15

அப்பி லுப்பென வென்மனக்குகை
 யொப்பி நின்றிடு மண்ணலா
னப்ப னெப்பவ னன்னை யொப்பவ
 னற்பு தப்பொரு ளானவன். (ரமண) 16

சாக்கி ரங்கன வோடு சாற்றுசு
 ழுத்தி வாதைய தற்றவன்
வாக்கி றந்து நிறைந்து நின்றதோர்
 வாக்கி யப்பொரு ளானவன். (ரமண) 17

சஞத னப்பொரு ளான வேதியன்
சாதி பேதம தற்றவ
னஞதி நின்மல ஞான நாயக
னன்பி னில்வரு சோதியான் (ரமண) 18

சற்கு ணக்கட லான நற்குணன்
சற்ச னர் புகழ் நீதியா
னற்பு தச்சுவை யான பாகின
னசிப தத்துரு வானவன் (ரமண) 19

பக்தி யோடுப ணிந்து நின்றிடு
பக்த கோடியர் தங்களை
முத்தி மெய்க்கரை காட்டி மூதறி
வுற்றி டத்வஜ மிட்டவன் (ரமண) 20

அடாத செய்கைய ளிக்கு மிந்திய
வஞ்சனைப் பொறிவா யிலில்
விடாது வீழ்ந்துவி ளிக்கு மென்மனப்
பேயை வாவென வாளுவாய். (ரமண) 21

அங்க மேறிய கங்க ரித்திடு
மாண வப்படு பாவியைத்
துங்க ஞானவாள் கொண்டு சாடுவீர்
தூமணிச்சுட ராகினீர் (ரமண) 22

பானு வம்சவி நோத ராமனும்
பங்க யப்பெரு வாழ்வனும்
மானுஞ் சூலம ணிந்த தேவனும்
மாதவக்கும ரேசனும் (ரமண) 23

போற்றி யென்மனக் கோயிலுற்றிடு
புண்ணி யத்திரு மேனியாய்
போற்றி நின்முகம் போற்றி நின்மனம்
போற்றி நின்பத மையனே (ரமண) 24

நச்சி நின்றுந விற்று வேங்கட
ரமண னுவிலு மேவிய
வுச்சி தச்சுவை யான வுன்பத
முச்சி வைத்திட வேண்டினேன். (ரமண) 25

---

## பொன்னொளிர் பத்து

பொன்னொளிர் வடிவி னனே பூரண வதனத் தானே
தன்னருஞ் சுவானு பூதி தரையெலா மணக்க வேழை
யுன்னரும் புகழைக் கேட்டு வுலகெலாந் தேடி வந்தே
னென்னரு ளிறையே ஞான ரமணனே சோதிக் குன்றே. 1

சோதியே வடிவாய் நின்ற சோணமா சைலந் தன்னில்
வேதிய வுருவி னோடு விருபாக்ஷ குகையின் மேவு
மாதியே யனாதி வைப்பே யமலனே ரமணா வென்னைச்
சோதியா தாண்டு கொள்வாய் சிற்பர சொரூப நீயே. 2

சிற்பரா னந்த வாழ்வே சிவத்தொடுங் கலந்த தேனே
யற்புதா னந்தப் பாகே யகண்டனே ரமணா வுன்னைக்
கற்பகத் தருவாய் நாடிக் கடிதெழுந் தோடி வந்தேன்
விற்பன வுருவே காவாய் விமலனே யருட்கண் டந்தே. 3

தந்திடாய் தளிர்ப்பொற் பாதந் தமியனேன் சிரத்திற் சூடி
நொந்திடா வாழ்வ தெய்தி நொடியதிற் பவநோய் போக்க
வந்தனா வமரர் காணா வருணைவாழ் ரமணா மோனா
வெந்தநா ளடைவ னுன்னை யிருவிழி மணியே சொல்லாய். 4

மணியெனப் புகழ்வ தல்லான் மற்றொன்று மறியா வேழை
யணிமையி னின்று யானு மலறுவ தறிந்தி டாயோ
தணியென தகப்பே யின்று சடுக்கென வெனைவிட் டோடத்
துணியதை ஞான வாளால் சுந்தர ரமண போற்றி. 5

ரமணனே சகத்தி னோடும் ரவியுடுக் கணங்க ளானோன்
ரமணனே யகத்தி லாடும் ரத்தினச் சுடர் விளக்காம்
ரமணனே விமல வேத ராட்டினத் தாடுந் தேவன்
ரமணனே ஞான நாட்டில் ரமித்திடு மரசாய் நின்றோன். 6

நின்றிடு நினைவு தன்னை நிமிடத்தி னீக்கி நெஞ்சை
யன்றயன் றிருமா லாய்ந்திட் டறிந்திடா வழகன் பாதஞ்
சென்றிட நிறுத்துஞ் சோம சேகர ரமண மூர்த்தி
யென்பெருந் துயர நீக்கா யேகனே யோக வாழ்வே. 7

வாழ்ந்திடு முலகி னோடு வடிவுறு நாம மெல்லாந்
தாழ்ந்திட ஞானப் பார்வைத் தழலதைத் தனக்குள் வைத்தோ
யாழ்ந்திடும் யோக ஞான ரமணனே யழகின் மிக்கோய்
சூழ்ந்திடும் சுடரே சோண மலைவளர் புனிதத் தேவே. 8

தேவனே ரமண பாதந் தேடினேன் தெவிட்டா ஞானப்
பாவன தீதமோனப் பரம்பொரு ளுருவி னனே
சீவனும் சிவமு மொன்றாய்த் தேக்கிய வுளத்தி னனே
சாவதும் பிறப்பு மில்லா தத்துவ முடிவாய் நின்றோய். 9

நின்றிடும் சோண சைல நிலைத்திடும் ரமணன் வாழி
மின்றிகழ் சடைய னோடு விருபாக்ஷ குகையும் வாழி
வென்றிடுந் துன்பம் போக்க வேங்கட ரமணன் சொல்லும்
பொன்றிகழ் விருத்த மாலை பொலிவுற வாழி வாழி. 10

---

# பொன்னையொத்த பத்து

பொன்னை யொத்தபொ ருப்புரு சோணையி
லன்னை யொத்தவ ருட்குரு வாகிய
மின்னை யொத்ர மணமெய்த் (வேதியன்) தேசிகன்
றன்னைக் கண்டவர் தன்னை மறப்பரே. 1

ஆதி வேதிய னன்புரு வாகியோர்
சோதி மாமலை சோணையில் வந்தவா
நீதி யோதுர மணரி ரஞ்சனு
காதி லோது கதிபெறு மார்க்கமே. 2

பஞ்ச பூதத் தடங்கிடாப் பாவனன்
மஞ்சு றுங்குகை மாவிரு பாட்சியில்
பஞ்சு தங்கு பதத்துட னண்ணினன்
செஞ்சொ லின்ப ரமணமெய்த் தேசிகன். 3

மண் ணுு நீரும் வளர்ந்தெழு தேயுவும்
விண் ணுங் காலு நுழைந்துவி ளங்கிடு
மெண் ணுஞ் சங்கையு மெல்லையு மின்றிய
கண் ணுக் காவி ரமணனென் காதலன். 4

அருணை வாழு மழகன முதனென்
கருணை வாழுங்க டவுளன் காட்சியான்
தருண ஞான சதோதய சூரியன்
பொருண லந்தரு பூரண போதகன். 5

கஞ்சன் மாலுங்க டிதெழுந் தோடியும்
மிஞ்சி நின்றுமி ளிரும்பொ ருப்பிடை
கொஞ்சி நின்றுகு லவுவ தன்றியும்
நெஞ்சி னுள்ளும் ரமணனிறைந்தனன்.

வாரும் வாரும்ர மணம காமுனி
தாரும் தாரும ருளெனத் தாழ்ந்திட
ஆரும் கோரும்வ ரமத ளிப்பவன்
காரு ளூறிக்க சிந்திடு மாரியான். 7

தங்கு மின்பந்த தும்பிடு பாடலான்
சங்கை யின்றிச்ச கத்தொளிர் ஞானியான்
கங்கை தங்குக டவுளு ருவினு
னிங்கு தங்குமி றைவன்ர மணனே. 8

எத்தி சையரு மன்பரு மெய்தியே
யத்த னத்தனெ னத்தொழு தேத்துவார்
முத்த னனந்த மோனர மணனைச்
சத்துச் சித்தெனத் தாவித் தொழுவரே. 9

வாழி வாழிர மணம காகுரு
வாழி வாழிய ருணம காகிரி
வாழி வேங்கடன் வாய்சொலும் பாடல்கள்
வாழி யூழிதோ றன்பர்கள் வாழியே. 10

---



## கும்மி

ரமண குருபதம் பாடுங்க டியதைத்
தேடிநின் றோமித் தாடுங்கடி—பெண்காள்!
கூடிநின் றோமித் தாடுங்கடி.

தங்குஞ் சிவலோகந் தன்னைவிட் டுத்தய
வாகத்தி ருச்சுழி தன்னில் வந்து
அங்குமி ருக்கம னஞ்சகி யாமலே
யருணகி ரிதனை நாடிவந்தான் (ரமண) 1

விரும்பி வந்திடு மன்பர்க ளைவிரு
பாட்சிகு கையினிற் றனிருந்து
கரும்பு போல்ருசி காட்டிக் களித்திடக்
காட்சிதந் தானருட் பார்வையுடன் (ரமண) 2

சோணகி ரிதன்னிற் சோதிவ டிவதாய்த்
தோன்றிடு மீச னருளாலே
ஆணவ காமிய மாயைய றுத்தெறிந்
தான்ம சுகத்திற் களித்திடுவான் (ரமண) 3

எங்குநி றைந்தப ராபர மாயொளி
தங்குமி டமதொன் றில்லாமலே
கங்குல் பகலற நின்றவி டமதைக்
கண்டுக ளித்தனன் தானுகி (ரமண) 4

பஞ்சபூ தங்களிற் றனிருந் தானவன்
பஞ்சகோ சங்களைத் தான றுத்தான்
பஞ்சதன் மாத்திரை தான்குடித் தானவன்
பஞ்சவிந் தியத்தைத் தான்செயித்தான் (ரமண) 5

மூன்றுச ரீரமுந் தான்மறந் தானவன்
மூன்றவ ஸ்தைகளுந் தானொழித்தான்
மூன்றுகு ணங்களுந் தாண்டிவிட் டானவன்
மூன்றுப தங்கடந் தேறிவிட்டான் (ரமண) 6

பின்னும் வினையதுங் காணுண் டிபிறை
யோங்குத னிச்சிவ மானுண்டி
இன்னும் ஜீவவுயி ரானுண் டியினி
தாகப் பரவுயி ரானுண்டி (ரமண) 7

ஜீவத்து யிரையும் பரத்து யிரையும்
சேர்த்திறு கப்பிடித் தொன்றாக்கி
பாவத்தி னின்றுத னைமறந் தேபர
மாகிப்ப ழுத்துத்த னித்துவிட்டான் (ரமண) 8

வீணினில் வாயைவ ளர்ப்பதி னுலென்ன
வேங்கட ரமண வேதியனே
காணினிக் காட்சியென் றோதிய றைந்தானே
கண்விழி யாலென்றன் கன்னத்திலே (ரமண) 9

ரமணனென் சற்குரு ரமணனென் போதகன்
ரமணனென் னுயக னுகிவிட்டான்
நமவென்ற வன்பாத நாடிவி ழுந்துநாம்
நாட்டிய மாடுவோம் ஞானப் பெண்காள் (ரமண)10

---

ஓமெனும் பொருள் நாமெனும்படி
தானிருந்ததை நானறிந்திட
மோனமந்திர ஞானசுந்தர
நாதமின்றியே நீமொழிந்ததை—மறவேனே.

---